2



# கந்தபுராணபடன

## உபந்யாசம்.

இது

கணேசபுரநகரம் (பிள்ளையார்பட்டி)

மு. மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை

வெளியிட்டது.

உ

குஹமயம்.

# கந்தபுராண படன

## உபநியாசம்.



சிங்கப்பூர்

நகரத்தார்கள்

விரும்பியபடி

யாழ்ப்பாணத்து-நல்லூர்

உபயவேதாகமபண்டிதர்.

**வே. கநகசபாபதி ஐயரவர்கள்**

கந்தபுராணபடனஞ்செய்து

முற்றுவித்தஅன்று

செய்த உபநியாசம்.

இது

கணேசமாநகரம் (பிள்ளையார்பட்டி)

மு. மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை

வெளியிட்டது.

SINGAPORE:

THE COLONIAL PRESS, PRINTERS.

1915.



PANDIT N. V. KANAGASABAPATHY IYER,

Nalloor, Jaffna.

## சுப்பிரமணியக்கடவுள் துதி

தேவாதி தேவர் கடந்தேவை ஞானச்
    செல்வத்தை யன்பருள த்தினிக்குந்தேனை
யோவாதவின்பத்தை வடிவேலங்கையுடைய
    தொருபெருவாழ்வை யொருமுனிக்காய்
நாவாரமறைகளெல்லாஞ் சொல்லும்
    போதநற்குருவை நான்மறையு நாடவொண்ணுக்
கோவானசிவக்கன்றைச் சிங்கைவாழ்வைக்
    குணக்குன்றைக்குமரனையே குறித்துவாழ்வாம்.

மகாமேன்மை பொருந்திய தொடுவாய் இராச்சியங் களுக்கு (Straits Settlements) மதாணிபோல் விளங்கும் சிங்கைமாநகரிலே, (Singapore) சுப்பிரமணிய பத்தி செல்வம் சிவபுண்ணியம் முதலியவைகளிற் சிறந்து இனிது வாழ்ந்திருக்கும் ஸ்ரீமான்களாகிய எழுநகர வணிகர்கள் என்னும் நகரத்தார்கள் தெய்வப் புலமையினையுடைய ஔவையாராலே "சான்றோருடைத்து" என இனிது பாடப்பெற்ற தொண்டை நாட்டிலே சத்தபுரிகளுட் சிறந்த காஞ்சிபுரத்திலே குமரகோட்டம் என்னும் ஆலயத்திலே வீற்றிருந்தருளும் சுப்பிரமணியக்கடவுள், ஆதிசைவரும் தமது வரப்பிரசாதியும் தம்மை வேதாகம முறைப்படி மெய்யன்போடருச்சிப்பவரும் சிவாநுபவச் செல்வருமாகிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளுக்குச் சொப்பனத்திலே

தோன்றி "அன்பனே! நீ காந்தபுராணத்தாறு சங்கிதையின் முதற்காண்டமாகிய சிவரகசிய கண்டத்தினுள்ள நமது சரித்திரத்தைக் கந்தபுராணம் எனப் பெயரிட்டுத் தமிழிலே பெருங்காப்பியமாகப் பாடக்கடவாய்" என்று ஆஞ்ஞாபித்து "திகடசக்கரச் செம்முகமைந்துளான்" என்று அடியெடுத்துக் கொடுக்கப்பெற்று அச்சிவாசாரிய சுவாமிகளாற் பாடப்பெற்றதும்; சிற்சில இடங்களிலே அச்சுப்பிரமணியக்கடவுளாற் றிருத்தப்பெற்றதும்; அரங்கேற்றுங் காலத்திலே ஆக்ஷேபித்த புலவருக்கு அவ்வாக்ஷேபம் அக்கடவுளா னீக்கப்பெற்றதும்; எத்தனைமுறைபடிப்பினுங் கேட்பினுஞ் சிறிதுந்தெவிட்டாது புத்தமிர்தத்தினுந் தித்திக்கு மத்தியற்புதவதி மதுரவியல்பினையுடையதும்; தன்னை விதிப்படி பேரன்போடு நியமமாகப் படித்தல் கேட்டல் செய்வோர்களுக்கு இம்மையிலே ஐசுவர்யம், புத்திரபாக்கியம், நோய்நீக்கம், சர்வஜனவசியம், சத்துருஜயம், தீர்க்காயுசு முதலியவற்றையும் மறுமையிலே சிவஞானம்வாயிலாக மோக்ஷத்தையுங் கொடுக்கும் பெருந்தன்மையினையுமுடைய கந்தபுராணத்தைப் படனஞ்செய்வித்துக் கேட்டல்வேண்டுமென்று பெருவிருப்புற்றார்கள்.

அவ்வாறு விருப்புற்ற நகரத்தார்களின் கருத்துப்படி யாழ்ப்பாணத்து நல்லூர் உபயவேதாகம பண்டிதரும், வைதிகசைவ உபாத்தியாசகரும், சிவபுராணப் பிரசாரகரும், சைவ வைஷ்ணவ கதாப்பிரசங்கியும், பலவகைவண்ணப் பாராவாரமும் ஆகிய ப்ர்மஹஸ்ரீ. வே. கநகசபாபதி ஐயரவர்கள் கந்தபுரான படனஞ்செய்தற்கு உடன்பட்டார்கள். பின் சோதிஷர்கள் ஆனிமாசத்தில் உகஉ ஆதிவாரமும் சதயநக்ஷத்திரமும் சித்தயோகமும் கூடிய சுபதினத்திலே நன்முகூர்த்தம் நிச்சயித்தார்கள். அச்சுபதினத்தில் தேங்கு ரோட்டிலுள்ள (Tank Road) தண்டாயுதபாணி கோயிலின் முன்பக்கத்திலே ஓவியத்துறையிற் கைவந்தவர்கள் செய்த சித்திரப் படங்களாலும், மாசிலாவர்ண மேற்கட்டி களாலும் படிகத்தாலாயகினை விளக்கு

கள், நிலைவிளக்குகள் பாவைவிளக்குகள், வெள்ளிக் குத்து விளக்குகள், சந்திரிகாதீபங்கள், மின்சாரதீபங்கள் முத லியவற்ருலெக்காலமும் மங்கலகரமாக அலங்காரஞ்செய் திருக்கும் சந்நிதானத்திலே, கரும்புகளையும் வாழைகளை யும் கமுகுகளையும்நாட்டி, புஷ்பமாலைகளைத் தூக்கி, மகர தோரணம் நிலைகண்ணுடிகளை நிரைத்து, மத்தியிலே பல நிறக்கண்ணுடி முதலியவற்ருலலங்கரித்த பீடமிட்டு அழ கை அலங்கரித்ததுபோலப் பணிசெய்வோர் மிகவனப்புச் செய்து வைத்தார்கள். பின்பு புராணங்கேட்கும் விருப்ப மிக்க பலரும்வந்து சேர்ந்தார்கள்.

பிரம்ஹஸ்ரீ உ.வே ஆ. பண்டிதர் கநகசபாபதி ஐயரவ ர்கள் சுபலக்கினத்திலே அம்மண்டபத்தினடுவே இட்டபீ டத்திலே பசும்பட்டு விரித்து, அதன்மேல் வெண்பட்டை மடித்து இட்டு, புஷ்பங்களைத்தூவி, தூபங்கொடுத்து ஆச னங்கற்பித்து, கந்தபுராணத் திருமுறையை யதன்மேல் வைத்து அரிச்சித்து வணங்கித் துதித்துப் பின் ஆசனத் தின் மேலிருந்து பிரசங்கிக்கத் தொடங்கினுர்கள்.

சிவபுராண படனவிதிகள் இவையென்பதும், கந்தபுரா ணத்தை அருளிசெய்த கச்சியப்பசிவாசாரிய சுவாமிகளின் சரித்திரமிவ்வா றென்பதும், விநாயகர் காப்பாகிய "திகட சக்கர" என்னும் முதற்செய்யுளின் ஆதியிலும் சிவஸ்துதி யாகிய 'திருவந்த' என்னுஞ் செய்யுளின் ஆதியிலும் காய த்திரிமகாமந்திரத்தின் முதலெழுத்தைப்பஞ்சாக்ஷர மகா மனுவையும் ஸ்ரீருத்திரத்தையும் தன்னிதய மத்தியிற்கொ ண்ட எசுர்வேதத்தின் ஆதிபதத்தின் ஆதியெழுத்தோடு புணர்த்திக் கூறிய ஏதுக்களிவை என்பதும், சிவ பெருமா னுக்கு ஆறு செய்யுட்களால் துதிகூறிய காரணங்களிவை என்பன முதலிய இன்றியமையாதனவற்றை விரித்துப் பிர சங்கித்தார்கள்.

அன்று முதலாக நகரத்தார்களும் பிறரும் அத்திய ந்த விருப்போடு நியமமாகக் கேட்டுவந்தார்கள். திருக்க

ல்யாண முதலிய சுபசரிதங்கள் படிக்குந் தினங்களிலே குஹபர சிவத்திற்கு விசேஷ பூசைகளும் அலங்காரங்களும் செவ்வே நடைபெற்றன.

பண்டிதரவர்கள் புராணபடனஞ் செய்யுங்காலங்களிலே அவ்வச் சந்தர்ப்பங்களுக்கு அத்தியாவசியமின்றியமையாத சரித்திரங்கள், அருட்பாக்கள், உபநிஷத்துக்கள், ஆகமங்கள் இவற்றிற் சிற்சில உதாரணங்களாகக் காட்டிப் பிரசங்கித்தார்கள். அதுமட்டோ அவற்றுட்சில ஆக்ஷேபசமாதானங்களுஞ் செய்தார்கள்.

இவ்வாறு பிரசாரகரவர்கள் புராணபடனஞ் செய்து ஆநந்த வூ சித்திரை மீ சம்பூர்ண பட்டாபிஷேகம் மங்கலகரமாக நடத்தினார்கள்.

பின் பிரசாரகரவர்கள் புராணத்திரு முறையைவிதிப் படியருச்சித்து வணங்கித்துதித்து, சுப்பிரமணியக்கடவுளின் பிரபாவங்களைப் பல பிரமாணங்கள் காட்டி இனிது பிரசங்கித்தார்கள்

பின் நகரத்தார்கள் ஐயரவர்களுக்குத் தக்கதொகை யுடைப்பொருள் முதலியபல சம்மானங்கள் செய்து மகிழ்ந்தார்கள்,

உடனே உபயவேதாந்தப்ரவர்த்தகர் ப்ர்ம்ஹ ஸ்ரீ சம்பத்குமாரசக்கிரவர்த்தி ஐயங்காரவர்கள்(Post Master) எழுந்து புராணப் பிரசாரகரவர்களின் கல்வித்திறமை, பிரசங்கசக்தி, சமயோசிதயுத்தி முதலியவைகளை விரித்துப்பேசிப்பின் நகரத்தார்களின் பதிபுண்ணிய பரிபாலனம், சிவபத்தி, கொடைமுதலிய நற்குணங்களையும் விரித்துக் காட்டி, பிரசாரகரவர்கள் ஆசீர்வாதம் சொல்வார்கள் என்று கூறியிருந்தார்கள்.

வே. கநகசபாபதி ஐயரவர்கள் நகரத்தார்களுக்குச் செய்யுள்ரூபமாக ஆசிர்வாதம் செய்தார்கள்.

அவ்வாசீர்வாதம் வருமாறு:—

குஹமயம்.

# வே. கநகசபாபதி ஐயரவர்கள் செய்த.

## ஆசீர்வாதம்.

### காப்பு.

வெண்பா.

வாணிகத்திற் சிங்கபுரம் வைகும் வணிகரியல்
பேணியவா சீர்வாதம் பேசுதற்கு—மாணடியார்
தஞ்சமதாய் நெஞ்சமுறுந் தந்திமுகத் தைங்துகரன்
கஞ்சமலர்ச் செஞ்சரணங் காப்பு.

கங்கை வேணியன் கடுக்கை மாலையன்
சங்கரன் சதாசிவன் சம்பு வகண்டிதன்

புங்கவன் புராதனன் பூத நாதன்
பாப நாசன் பரேசன் சுரேசன்

ஆபகா பதியென வமர்கரு ணாலயன்
சாப பூதரன் ருணு வெண்குணன்

கால காலன் கஞடகிருத்து
சூல பாணி சோதி ரூபன்

அத்துவி தீய னரன்பர னகாரணன்
நித்திய னிராமய னிரிக னீசன்

விசுவ நாதன் மிருக தரகரன்
பசுபதி மகேசன் பன்னக பூடணன்

திருவடி பணியுஞ் சிவார்ச்சன நியமன்
மருவிய கௌசிகன் மரபுறு தோன்றல்

கவுணியர் மரபு கைவந் தேத்தக்
கவுணியர் மரபிற் காழிமா நகரிற்

தேவா ரத்துதிக் குஞ்சேய் புகலுந்
தேவா ரத்துதி சேரும் பதிகளாம்

ஆவியின் பாங்கே யடைதருங் கோணைபால்
ஆவியின் பாங்கே யமர்கே தீச்சுரம்

வண்ணச் செய்யுளால் வல்லோர் புகழ்ந்த
வண்ணச் செய்யுள் வளமலி கதிரை

சங்கமந் தாவரந் தழைவுறச் சாகர
சங்கமந் தாவரஞ் சார்ந்த நாகுலம்

என்னுமா லயங்களு மியல்புறு நெஞ்சிடை
என்னுமா லயங்க ளிலாதோர் வசிக்கும்

ஈழமா மலையி னியன்முடி வீழ்ந்தே
ஈழமா மலைலிலா வெழினு டையோன்

காவலர் வாசங் காதம் பரக்குங்
காவலர் வாசங் கவின்ற மாளிகையிற்

செல்லூர்ந் தமருந் திறம்பொலி கின்ற
நல்லூர் நாம நகரி வாசன்

உபயவே தாகமத் துறுபொரு ளாய்ந்தே
சபையி னிற்பிர சாரணம் புரிவோன்

ஒப்பருங் குணத்தா வுயர்ந்த வேங்கட
சுப்பிர மணிய சுகுண விப்பிரன்

மாதவப் பேற்றான் மகிதலத் துதித்த
காதல னாகிய கனக சபாபதி

வேதிய னன்போடு விளம்பு மாசிர்
வாதங் கேட்டு மகிழ்தல் வேண்டும்

---

மாவிரி சோழ வளநாட தனிற்
காவிரி கடலொடு கலக்கு முகமாம்

பூம்புகா ரென்றே புலவர் புகழ்ச்சி
மேம்படு நகரின் மீது நின்றே

பற்பல சிவஸ்தலம் படர்ந்து வணங்கி
அற்புதன் மெய்யரு ளடைந்து சென்றே

ஆல வாயி னவிர்சடைக் கடவுளும்
வேலமர் கரத்தன் விசாகோற் பவனும்

சங்க மிருந்து தமிழ்மொழி யாய்ந்த
துங்கநற் பாண்டித் தொன்னா டென்னும்

தெரிவை நுதற்றுறுந் திலகம் போல
மருவு மிளசை மாநக ரடைந்து

சகத்தெழு கோவிற் றலத்த ராகி
மகத்துவ வெழுநகர் வணிக ரென்ன

வாசங் கொண்ட வாழ்க்கையின் மிக்கோர்
ஈசனை மறவா விருதய முடையோர்

மூர்த்தியுந் தலமுந் தீர்த்தமு மமைந்து
சீர்த்தி பெற்ற சேதுரா மேச்சுரம்

காசிமா நகரங் கயைபிர யாகை
ஆசிலாக் காஞ்சி யாரூர் தில்லை

ஆதிய யாத்திரை யன்பொடுஞ் செய்வோர்
மாதுயர் நீங்கி மன்னுயி ருய்ய

அப்பெருந் தலங்களு ளாங்காங் கேற்புழித்
தப்பிலா வன்ன தான சத்திரம்

வேத பாடம் விளம்புஞ் சாலை
நாதனூர் புரான நவிலு மண்டபம்

யாத்திரைக் காரருக் கன்றி யெவர்க்கும்
வாய்ப்புறு மடாலயம் வளர்நந் தனவனம்

திருந்துநீர்த் தடாகஞ் சிறப்புற வமைத்து
பொருந்துமா றெவையும் புகன்றினி தமைப்போர்

மண்டல வம்புவி மரபுறும் வழுதி
மண்டல மலையின் மண்டல நந்து

மண்டலஞ் செறிவயன் மருவுநீர் மண்டலம்
மண்டலம் புகழ்மும் மண்டலங் களிலும்

சீரணங் கொண்ட சிவாலயம் பலவும்
பூரண மாகப் புதுக்கி யமைத்து

அறைதரும் விழவு மர்ச்சனை திகளும்
முறைபெற நடாத்து முதன்மை யாளர்

சைவ சமயமுந் தமிழும் வளர
எய்திய தம்பொரு ளினிது கொடுப்போர்

தமிழ்மறை யாகச் சாற்றுதே வாரம்
அமிழ்தினு மினிய வாந்திரு வாசகம்

ஆதிய வான வருட்பெருந் தோத்திரம்
ஓதித் தினமு முவப்புறு சீலர்

தெய்வஞ் சிவனெனத் தெளியும் வண்ணம்
சைவ மதப்பிர சங்க சபைகள்

ஆண்டாண்டு நாட்டி யவைநிலை பெறவே
வேண்டும் பொருள்கள் விருப்பொடுங் கொடுப்போர்

மாரி போன்று வரைவின் றளித்துப்
பாரி யென்று பகர்வுறும் வள்ளல்

கொடுக்குங் கொடையுங் குமணன் கொடையும்
அடுக்குமே யிதற்கென் றகமிக மகிழ

வித்து வான்களை விரும்பி யழைத்தே
உத்தமப் பரிசி லுபசரித் திவோர்

சிவதரு மங்களைச் செய்யுந் திறத்தில்
எவருந் தங்களுக் கிணையில் லாதோர்

திரைகட லோடித் திரவியந் தேடி
வரைவிலா தீட்டும் வாணிக வலியோர்

வருநிதிக் களவு வரையா ஞகி
இருநிதிக் கிழவனு மேக்கறுந் தகையினர்

ஈட்டிய பொருளை யெவ்வற நெறியினுங்
கூட்டமா வொற்றுமை கொண்டு கொடுப்போர்

துலங்கு வெண்ணீறுந் தூயகண் டிகையும்
இலங்குமெய்ப் பொருளென வெண்ணிப் பூண்டே

கந்த மூர்த்தியே கலியுக வரதனென்
றெந்த நாளு மியல்புற நினைப்போர்

பேணிப் பிறவுந் தமபோற் பிறங்க
வாணிகஞ் செய்யும் வண்ண மாகச்

சென்ற சென்ற செழுநக ரெங்குங்
குன்றுதொ ருடிய குமரன் கோயில்

பற்றொடுங் கட்டிப் பதிட்டை முடித்து
நிற்றலு நடக்க நிதியங் கொடுப்போர்

சிவகதை கேட்டலுஞ் சிவகதை படித்தலுந்
தவமெனக் கொள்ளுந் தனிப்பே றுடையர்

வருந்திச் சரண்புகும் வறியார்க் கிதலும்
அருந்தவர்ப் பேணலு மாவின மோம்பலும்

அந்தணர்க் களித்தலு மறவோர்க் களித்தலுந்
தந்த நன்றி தனைமற வாமையும்

பகலிற் றேன்றிப் பாங்குறு நிலையும்
இகலு மழுக்கா றின்மையு மின்சொற்

சொல்லலும் பாவத் தொடர்பை நாளும்
வெல்லலுந் தருமநூல் விரித்தலு மொழுக்கம்

பேணலும் வாய்மையும் பெரும்பொறை தாங்கலும்
மாணுற வமைந்த வண்மை யாளர்

முன்னிய தந்தைதாய் மூத்தோர் குரவர்
துன்னுமெய் யடியார் தொழப்படுந் தகையர்

என்னுமிவர்க ளிணையடி பணிந்து
பன்னுந் தொண்டு பலவும் புரிவோர்

அத்துவித மான வருஞ்சித் தாந்த
உத்தமப் பொருளை யுள்ளுறக் கொண்ட

பூரண புராண போதகர் தமக்குப்
பூரண மாகிப் புறம்வழிந் தோங்கக்

கனக மாமழை சொரியுங் காத்தர்
பனக நாதனும் பகர்வரும் புகழோர்

அலையுறு வளமு மடவிசேர் வளமும்
மலைபடு வளமு மாநகர் வளமும்

மாடமா ளிகையு மன்னுமா வணமும்
கூடகோ புரமுங் குறைவ தின்றி

எங்கு நிறைந்த வியல்பினின் மிக்க
சிங்க புரத்திற் சேர்ந்து செய்யும்

மங்கல வாணிக வளமை யாளர்
கந்த புராணங் கம்பரா மாயண

சுந்தர காண்டந் தொகுந்திருக் கவிகள்
அன்புறுந் திருவிளை யாடற் புராணம்

பொன்பொலி வாத வூரர் புராணம்
இன்புறும் பிரபு லிங்க லீலை

மாசிலா வடியார் மாக்கதை யாகப்
பேசு கின்ற பெரிய புராணம்

என்னும் புராண விருங்கதை யெல்லாம்
பன்னும் விரிபு படமுறை நாடி

யாம்பிர சங்கமா யெடுத்துக் கூறத்
தாம்பெரு விருப்பந் தயங்குறக் கேட்டு

சிங்க மாமுகஞ் செறிதோ டாக்கள்
மங்கல மெடல்கண் மதாணி வைரம்

கொலிசுகன் முதலாக் கூற நின்ற
பல பல பரிசுகள் பலமுறை தந்தோர்

அவர்கொடை வாழ்க வவர்புகழ் வாழ்க
அவர்தவம் வாழ்க வவர்திரு வாழ்க

சூரன் முதலாச் சொல்ல நின்ற
கோர வெந்தொழில் கொண்ட வசுரர்

தேவருக் காற்றிய தீங்கு நீக்க
யாவரும் போற்று மிறைநுதல் விழியின்

மன்னருள் வடிவாய் வந்திடு மூர்த்தி
இன்னியல் வேதத் தெழுவாய் நின்ற

ஓங்கா ரப்பொரு ளுணரா வயனைப்
பாங்கா ரச்சிறை பலநாள் வைத்தோன்

சடக்கரத் துட்பொருள் சாண்மா துரன்குகன்
விடற்கருஞ் சத்தியாம் வேற்படைக் கரத்தன்

பெருமைசேர் புராணம் பின்னரு மிங்கே
அருமையிற் கேட்டே யகமிக மகிழ்ந்தே

பீதாம் பரமும் பெருவிலைப் பணியும்
மீதாம் பொருளும் விரும்பிக் கொடுக்கும்

நகர வைசியர் நாளும் வாழ்க
பகரு மவர்பயன் பலவும் பெறுக

ஒல்குநோ யென்று முடம்பி லணுகா
நல்வலி யெந்த நாளு மடைக

நந்தலில் சௌபரி நன்முனி போலச்
சந்ததி விருத்தி தவறு துறுக

வளமலி யளகை மன்னவன் போல
அளவிலாப் பெருநிதி யவையெலாம் பெறுக

மார்க்கண் டேய மாமுனி போலத்
தீர்க்க வாயுள் சிறப்பொடு பெறுக

வேதியர் வாழ்க வியன்பசு வாழ்க
காதன் மகளிர் கற்பு வாழ்க

விண்முகில் வாழ்க வேந்தர் வாழ்க
மண்மக டந்த மைந்தர் வாழ்க

அருமறை வாழ்க வாகமம் வாழ்க
தருமமார் சைவ சமயம் வாழ்க

வாழ்க வெண்ணீறு வாழ்க கண்டிகை
வாழ்க வைந்தெனு மந்திர வக்கரம்

வாழ்க வடியவர் மன்னு மாதவம்
வாழ்க சிவாலயம் வளர் விழாப்பூசை

வாழ்க வாழ்க வைசியர் பெருங்குலம்
வாழ்க வாழ்க வைசியர் பெருந்திரு

வாழ்க வாழ்க வைசியர் பெருங்கொடை
வாழ்க வாழ்க வைசியர் தருமமே

———:o:———

## எண்சீர் விருத்தம்.

---

வேதநெறி யாகமசாத் திரங்கள் வாழி
வேதியர்கள் வாழிபசு நிரைகள் வாழி
மீதுசெலு முகில்வாழி வேந்தர் வாழி
வெண்ணீறு கண்டிகையைந் தெழுத்து வாழி
மேதினியிற் சிவாலயநற் பணிகள் செய்து
வேண்டுமன்ன சாலைகளும் பிறவு மாக்கி
மாதரும சீலர்களாய் நகர மேவும்
வைசியரெலா மிட்டசித்தி மன்னி வாழி.

---

## கட்டளைக்கலித்துறை.

---

வாழிய வேதியர் வானவ ரானின மாமுகில்கள்
வாழிய வேழு நகர வைசியர்கண் மன்னுகுலம்
வாழிய துங்க வைசியர்க்குச் செல்வம் வருவழிகள்
வாழிய செல்வ வைசியர் தருமமிம் மாநிலத்தே.

---

ஐயரவர்கள் இவ்வாசீர்வாதச் செய்யுட்களைச்சொல்லி அவற்றின் பொருள்களை விரித்துப்பிரசங்கிக்க நகரத்தார்கள் சிரத்தையோடு கேட்டுமகிழ்ந்தார்கள்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

குஹமயம்.

யாழ்ப்பாணத்து நல்லூர் உபயவேதாகமபண்டிதர் வே. கநகசபாபதிஐயரவர்கள், நகரத்தார்கள் விரும்பியபடி செய்த புராணபடனங்கள்.:—



| கோழும்பு. | வருஷம் |
|---|---|
| கந்தபுராணம் - - - - | யுவ |
| கந்தபுராணம் - - - - | ஈசுவர |
| பெரியபுராணம் - - - - | பார்த்திப |
| திருவிளையாடற்புராணம் - - | நந்தன |
| திருவிளையாடற்புரராணம் - - | மன்மத |
| திருவிளையாடற்புராணம் - - | துர்முகி |
| பெரியபுராணம் - - - - | ஹேவிளம்பி |

மோல்மேன்.

| | |
|---|---|
| கம்பராமாயணம் சுந்தாகாண்டம் - | சுபானு |
| கந்தபுராணம் - - - - | சுபானு |
| திருவிளையாடற்புராணம் - - - | தாரண |

றங்கோன்.

| | |
|---|---|
| கந்தபுராணத்தில் தெய்வயானையம்மை திருமணப்படலம் | தாரன |

## சிங்கப்பூர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கந்தபுராணம் | - | - | - | - | விய |
| திருவிளையாடற்புராணம் | - | | - | - | விய |
| கந்தபுராணம் | - | - | - | - | செளமிய |
| பெரியபுராணம் | | - | - | - | சாதாரண |
| திருவிளையாடற்புராணம் | | | - | - | சாதாரண |
| திருவாதவூரர்புராணம் | - | | - | - | பரிதாபி |
| பிரபுலிங்கலீலை | - | - | - | - | பரிதாபி |
| கந்தபுராணம் | - | - | - | - | ஆநந்த |

## சைகோன்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கந்தபுராணம் | - | - | - | - | சர்வசித்து |
| பெரியபுராணம் | - | - | - | - | சர்வசித்து |
| திருவாதவூரர்புராணம் | - | | - | - | சர்வசித்து |
| கந்தபுராணம் | - | - | - | - | விரோகிருது |

## பிநாங்கு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரியபுராணம் | - | - | - | - | விரோதி |
| திருவிளையாடற்புராணம் | - | | - | - | கீலக |
| பெரியபுராணம் | - | - | - | - | கீலக |
| கம்பராமயணம் சூடாமணிப்படலம் | | | | | செளமிய |
| திருவிளையாடற்புராணம் | - | | - | - | ஆநந்த |

## பாகனேரி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரியபுராணம் | - | - | - | - | ஜய |

தேவகோட்டை.

| | | |
|---|---|---|
| கந்தபுராணம் | - - - - | விசுவாவசு |

அரிமழம்.

| | | |
|---|---|---|
| திருவிளையாடற்புராணம் | - - - | பராபவ |

மலாக்கா.

| | | |
|---|---|---|
| வாதவூரர்புராணம் | - - - - | பரிதாபி |

ஈப்போ'

| | | |
|---|---|---|
| கந்தபுராணம் | - - - - - | பிரமாதீச |

———:o:———

மேற்காட்டிய இடங்களில் புராணபடனங்கள் செய்து முற்றுவித்தபோது வே. கநகசபாதிஐயரவர்களுக்கு நகரத்தார்கள் செய்த சம்மானங்கள்.:—

சிங்கப்பூர்:— சிங்கமுகத்தோடா: இது பலநிற ரத்நங்கள் வரிசையாகப் பதித்துக்கீழே மணியசைந்தொலிக்குமியல்பினது.

சிங்கமுகக்கோவுசு:— இது ரத்நங்கள் பதித்துக் கண்கவர்வனப்பினது.

தங்கப்பதக்கம் (Medal):—இது ஒரு பக்கத்தில் சுப்பிரமணியக்கடவுள் அம்மைமார்களோடு மயில்வாகனத்தில் வீற்றிருக்கும் பாவனை யாகச்செய்து, அதைச்சுற்றித்தமிழில் "பிர்ம்ஹஸ்ரீ வே. கநகசபாபதிஐயரவர்ளுக்கு. சிங்கப்பூர் நகரத்தார்கள் உபகரித்தது" என்றும்; மற்றைப்பக்கத்தில் இங்கிலீஷில் "Presented by Chetty Community, Singapore, to Brim-Hasri V. Kanakasabhapathy Iyer, of Nelloor, Jaffna, for his Efficiency in Tamil Literature, 1910, என்றும் எழுதப்பெற்று ரத்நங்கள்பதித்த முகப்பினையுமுடையது

சைகோன்:— சிங்கமுகத்தோடா. நகாசுவேலை செய்யப்பெற்றுச்சிறந்தது.

ஈப்போ:—தங்கப்பதக்கம். (Medal) இது ஒரு பக்கத்தில் தண்டாயுதபாணி விக்கிரகம் தங்கத்தால் வார்ப்பிடஞ்செய்து பதித்துஅதைச்சுற்றித்தமிழில் "ப்ர்ம்ஹஸ்ரீ வே. கநகசபாபதிஐயரவர்களுக்கு,ஈப்பொ நகரத்தார்கள் உபகரித்தது" என்றும்; மற்றைப்பக்கத்தில் இங்கிலீஷில் "Presented by Chetty Community, Ipoh, to Brim-Hasri V. Kanakasabhapathy Iyer, of Nelloor, Jaffna, for his Efficiency in Tamil Literature, 1914, என்றும் எழுதப்பெற்று, சரஸ்வதிதேவி வீணைவாசித்த பாவனையாக நடுவே வைத்துக்சூழ வைரரத்நங்கள் பதித்த முகப்பினையுமுடையது.

தேவகோட்டை:—முன்கௌரிசங்கரமும்பின்முகப்புமுள்ள ஏறுமுகக்கண்டிகை.

மோல்மேன் :—சிங்கமுகக்காப்பு.

இவைகளே அன்றிமேற்காட்டிய ஊர்களிலுள்ள நகரத்தார்கள் உயர்ந்த பீதாம்பரங்களும், பட்டுக்களும், சோமன்சோடிகளும், சேலைகளும், கைக்கடிகாரத்துக்குத் தூக்குதற்கேற்ற பொன் டாலர்களும், பொருட்டோகைளும் உபகரித்தார்கள்.

---

சிங்கப்பூர்-ஆரியசங்கம். தங்கபதக்கம். (Medal) இது ஒரு பக்கத்தில் தமிழில் ஓம் என்றும் இங்கிலீஷில் "Arya Sangam, Singapore", 1913, என்றும் மற்றைப்பக்கத்தில் "Presented to N. V. Kanakasabhapathy Iyer, Nelloor, Jaffna, என்றும் எழுதப்பெற்றுச் சிறந்த கொடிவேலை செய்தமுகப்பினையுமுடையது.



